என்பது என்ன என்று சரியாக விளங்கிக் கொள்ளாமையால் ஏற்படும் அனர்த்தம் ஒவ்வொரு முயற்சிக்கும் ஏற்ற பலன் நிச்சயம் கிடைத்தே தீரும் என்பதே விதி என்ற சொல்லுக்குக் கருத்து. எனவே விதியை நம்பினால்தான் முயற்சிக்கு இடமுண்டு. நம்பா விட்டால்தான் இடமில்லை. பழவினையின் பயனை நுகரும்போது நமது முயற்சிக்கும் இடமுண்டு என்பதைக் காலஞ் சென்ற சிவபாத சுந்தரம் அவர்கள் ஒரு சிறு உதாரண மூலம் விளக்கியுள்ளார். பழவினையின் பயன் ஒருவன் கடன் பட்டிருத்தலை ஒத்தது. தொடக்கத்தில் அவனுடைய உழைப்பிலே பெரும்பகுதி அவனுடைய பழைய கடனைத் தீர்ப்பதிலேயே செலவாகிவிடும். தனது உழைப்பு முழுதும் கடனை அடைப்பதிலேயே செலவாகி விடுகிறது என்று அவன் உழைக்காமல் இருக்கலாமா? அங்ஙனம் இருப்பின் அவனுடைய கடன் மேலும் மேலும் பெருகும். அங்ஙனமன்றி அவன் உழைக்கத் தொடங்கினால் எவ்வளவு அதிகம் உழைக்கிறானோ அவ்வளவுக்கு அவனுடைய கடனும் குறையும். பின் பணத்தைச் சேர்க்கவும் இடமுண்டு. அதுபோலவே ஊழினால் துன்பப்படுகிறவன் முயற்சி செய்யாமல் இருந்தால் இன்னும் அதிகத் துன்பத்துக்கு ஆளாவான், முயற்சி செய்தால் அதற்கேற்ப அவனது துன்பம் குறையும்.

நமது வாழ்வை ஒரு பிறிட்ஜ் விளையாட்டுக்கு ஒப்பிடுகிறார் பேராசிரியர் ராதாகிருஷ்ணன். இவ்விளையாட்டிலே நமக்குக் கிடைக்கும் சீட்டுக்களைப் போல நமது பழவினையை வைத்துக் கொள்ளலாம். இச் சீட்டுக்களை நாம் நம் விருப்பப்படி தெரிந்தெடுப்பதில்லை சீட்டுக்களைத் தெரிந்தெடுக்க நமக்கு உரிமை இல்லாவிடினும் அச் சீட்டுக்களைக் கொண்டு வெற்றியோ, தோல்வியோ ஈட்டும் வாய்ப்பு நமக்கு உண்டு. இதைப் போலவே பழவினையைத் தெரிந்தெடுக்க அதிகாரம் இல்லாவிடினும் அதனை வைத்துக் கொண்டு மேலே ஆக்குவதோ, அழிப்பதோ யாவும் நம் கையிலேயே உள்ளது.

### வினைப்பயன் நுகர்வு பற்றிய சில நியதிகள் :

வினையைப் பற்றிய இக் கட்டுரையை முடிக்குமுன் வினையைப் பற்றி இன்னும் மூன்று கருத்துக்களைக் குறிப்பிடுவது அவசியம். அவற்றை மிகச்சுருக்கமாகக் குறிப்பிடுவோம். முதலாவது தீவினையின் பயனான பாபத்தை நல்வினையின் பயனான புண்ணியம் நீக்கமாட்டாது. ஒவ்வொரு வினைக்கும் உரிய பயனை நாம் அனுபவித்தே தீர வேண்டும். ஒரு குழந்தையை இம்சித்துக் கொன்றுவிட்டு அதன் பெற்றோருக்கு வேண்டிய உதவியைச் செய்தால் குழந்தையைக் கொன்ற பாபம் தீர்ந்து விடாது. அதற்குரிய பலன் கிடைத்தே தீரும். பெற்றோருக்குச் செய்த உதவிக்குப் பலன் வேறாகக் கிடைக்கும். இரண்டாவது அவரவர் செய்த நன்மை தீமைகளின் பலன்களை அவரவரே அனுபவித்தல் வேண்டும். அதிக புண்ணியம் செய்த ஓர் ஆன்மா தனது புண்ணியத்தில் ஒரு பகுதியை அதிக பாவம் செய்த ஆன்மாவுக்குக் கொடுத்து அவ்வான்மாவை அப்பாவ பலன்களை அடைவதிலிருந்து நீக்க இயலாது. இவை பொது விதிகள். இவ்விதிகளுக்கு விலக்குகளும் உண்டு. விலக்குகளுக்கு இறைவனுடைய அனுக்கிரகம் தேவை.



## கன்மம் பற்றியது

### பற்றற்ற வினை :

மூன்றாவது தீவினையைச் செய்தவன் துன்பத்தை அனுபவிக்கப் பிறப்பது போலவே நல்வினையைச் செய்தவன் இன்பத்தை அனுபவிக்கப் பிறக்கிறான். எனவே தீவினையை நீக்கி நல்வினையை மட்டும் செய்வது பிறப்பை யொழித்து வீடு பேற்றை அடைய வழியாகாது. நல்வினையையும் ஒரு விலங்காகவே பேசுவது வழக்கம். தீவினையை இரும்பினாலே செய்த விலங்காகக் கொண்டால் நல்வினையைப் பொன்னாலே செய்த விலங்காகக் கொள்ளலாம். பற்றற்ற வினைதான் பிறப்பை ஒழிக்க வழி. அதாவது நல்வினையை நான் செய்தேன் என்ற தன் முனைப்போடு செய்யாது அதன் பலனையும் எதிர்பாராது எல்லாம் திருவருள் என்ற கருத்தோடு செய்வதே பற்றற்ற வினை. இதனையே சைவசித்தாந்தம் நல்வினையை விட மேலான வினையாகக் கொள்ளுகின்றது. கன்ம பலன்கள் நம்மை அணுகாமற் செய்வதற்கும் இதுவே வழி. தீவினைப் பயனில் வெறுப்பும் நல்வினைப் பயனில் விருப்பும் கொள்ளாத ஒரு நிலையை அடைய வேண்டும். இந்த நிலைதான் சைவ சித்தாந்தத்தில் இருவினையொப்பு என்ற பெயரால் குறிப்பிடப்படுகின்றது. துன்பம் யாவற்றையும் துடைக்க இதுவே வழி.

ரு

**சமயங்கள் கூறிய தத்துவக்**
**கருத்துக்களை**
**விஞ்ஞான முறையில் ஆராய்தல்**

## சமயங்கள் கூறிய தத்துவங்களை விஞ்ஞான முறையில் ஆராய்தல்

- ★ பிரபஞ்ச வரலாறு
- ★ ஒலி அலையும் ஆன்ம அலையும்
- ★ சக்திகளின் சேர்மான ஆராய்வு
- ★ அணு
- ★ கன்மம்
- ★ வினைப்பயனால் உருவாகும் மறுபிறப்பு
- ★ பிறவாநிலை அடைதல்
- ★ பாவ புண்ணியங்கள் எவ்வாறு சேருகின்றன
- ★ பகுத்தறிவு மனிதனின் பரிணாம வளர்ச்சி
- ★ முற்பிறவியை அறிய முடியலாம்.

ந

# பிரபஞ்ச வரலாறு

## ஆன்மா :

வேதத்தில்: ஆன்மா முக்கியமானதெனவும், உபநிடதம்: ஆன்மா உடலை இயக்கும் பொருள் எனவும், சமணம்: ஆன்மாவை பரமாத்மா எனவும், நியாயம்: ஆன்மா ஐந்துபூத சேர்க்கை உணர்வுக் கோர்வை எனவும், மீமாம்ஷை: ஆன்மா மாற்றத்தால் பாதிக்கப்படும் பொருள் எனவும், மத்துவம்: ஆன்மா மாறுதல் இல்லாத பொருள் எனவும், சைவசித்தாந்தம்: ஆன்மா நிலையான பொருளெனவும் கூறுகின்றன.

ஆன்மாவைப்பற்றி சமயங்கள் கூறும் கருத்துக்களின் சுருக்கத்தை கூறியுள்ளோம். அவை கூறியவற்றில் சைவசித்தாந்தம் கூறியவை முழுமையாகவும் தற்போதைய விஞ்ஞானக் கோட்பாடுகளுக்கு அமைவாகவும் காணப்படுகின்றன என்பதனையும் கண்டு கொண்டோம். இவை பற்றிய எமது தத்துவ விளக்கத்தை தரமுற்படுகின்றோம்.

பிரபஞ்ச தத்துவநூலை நாம் முன்னர் வெளியிட்டு இருக்கின்றோம். இந்தப் பூமிக்குரிய சூரியனை பிரதானமாகக் கொண்டே இப்பிரபஞ்ச தத்துவத்தை ஆராய்ந்துள்ளோம். இந்தக் கோள்களின் சக்தியை கடவுளாகக் கருதியே சமய புராணத்தில் வர்ணித்து எழுதியுள்ளார்கள். ஆனால் இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சி மூலம் இந்தச் சூரியனை விட பத்தாயிரம் மடங்கு பெரிதான பலகோடி சூரியன்கள் இருப்பதாக கண்டுள்ளார்கள். இப்பூமண்டலத்துக்குரிய உயிரினங்களைப் பற்றி ஆராயும்போது சூரியனது சக்தியையும் சூரியனிலிருந்து வெடித்துச் சிதறிய கிரக சக்திகளையும் வைத்தே ஆராய வேண்டியுள்ளது. இந்த சேர்மான சக்திகள் சூரியனில் இருந்து கிரகங்கள் அமைந்து இருக்கின்ற தூரத்தைப் பொறுத்தும் ஒவ்வொரு கிரகத்திற்கும் மற்றைய கிரகங்கட்கும் உரிய தூரங்களைப் பொறுத்தும் ஒவ்வொரு கிரகப் பருமனையும் பொறுத்தே அமைந்துள்ளது. சூரியனின் வெடித்து சிதறிய கோள்களின் உஷ்ணம் வரவரக் குறைந்து பூமியிலிருந்து வெடித்துச் சிதறிய பொறி சந்திர கோளாக உருவாகிய பின்னர் குளிர் காரணமாக பூமியில் மழை பொழியத் தொடங்கியது. இதற்கு பல கோடி வருடங்களுக்குப் பிற்பாடு தீ, நீர், சக்திசேர காற்று மண்...

லம் உருவானது. இதை சமய புராணங்களில் சிவபெருமான் உமா தேவியை மணந்ததும் உருவத்தில் பெரியதான ஆனைமுகத்தையுடைய விநாயகன் பிறந்தான் எனக் கூறுகிறது.

## காற்று மண்டலம் உருவாகியதன் பின் பூமியில் உயிரினங்கள் தோன்றலாயின

சூரியனிலிருந்து வெடித்துச் சிதறிய கோள்களில் ஒன்றாகிய பூமியில் சேர்மான (ஆன்மா) அணுத்தொகை மாற்றங்களினால் முதலில் தோன்றிய உயிர் வாழ்வனவற்றில் தாவர இனமான அறுகம்புல் முதன்மையானது என்பதனை எமது பல வெளியீடுகளிலும் தெளிவுபடுத்தி இருந்தோம். இவ் அறுகம்புல் சேர்மான சக்தி குறைந்த சிறு அளவு காரணமாக தனது சந்ததியை விருத்தி செய்வதற்கு விதைகளை உருவாக்க முடியாதனவாக இருந்தன. எனவே அவை தமது கன்ம ஆற்றலினை மேம்படுத்தியதன் காரணமாக சேர்மான அணுத்தொகை கூடி தமது வேரிலே கிழங்கினை உற்பத்தி செய்து அக்கிழங்கின் மூலம் இன விருத்தி செய்யும் ஆற்றலினைப் பெற்றுள்ளது. இவை நிலத்தின் எப் பகுதிகளில் தமது வாழ்நிலை ஏற்படுகின்றதோ அப் பகுதிகளில் காணப்படும் சுவாத்திய நிலைகளுக்கு ஏற்ப தனது ஆற்றல் மூலம் இயல்பூக்கங்களை மாற்றியமைத்து தனது வடிவத்திலும் தன்மையிலும் சிறிது மாறுபட்டு சந்ததி விருத்தி முறையில் மட்டும் ஒரே வகையினதாக (கோரை, தாளை, வாழை, உருளைக்கிழங்கு) மாற்றமடைந்து வந்துள்ளதை நாம் உணர முடிகிறது.

இவ்வாறான தன்மையுடைய இத்தாவர இனமானது தன் ஆற்றலினை மென்மேலும் அதிகரித்துச் செயற்பட, அங்கு அவற்றின் சேர்மான அணுக்கூறு செறிவினில் தீயணுவின் பங்கு சிறிது கூடுதலான இடத்தைப் பெறும்போது ஆண் பெண் வேறுபாடு இன்றி விதைகளை உருவாக்கி அவ் விதை மூலம் சந்ததி விருத்தி செய்யும் இனமாக மாறுபட்டுள்ளன. (உதாரணம்: குரக்கன், பயறு, உழுந்து, மிளகாய் செடி போன்ற பல) தீயணுவினை கூடிய பாகம் கொண்டுள்ள தாவரங்கள் நீரின்றி நீண்டகாலத்திற்கு வாழுகின்ற ஆற்றலினை பெற்றுள்ளன. (உதாரணம்: வேம்பு, பாலை, பனை) பொதுவாக நாம் எமது வாழ்விலே பனை மரத்துடன் நெருங்கிய தொடர்புடையவர்களாக இருப்பதன்



காரணத்தால் இப் பனைமரத்தின் பயன்பாடு பற்றியும் நன்கு அறிந்துள்ளோம். பனை மரத்தில் அணுச் சேர்க்கைகளுள் தீயணு பெரும் பங்கு வகிப்பதனால் அது வைரமாகவும் நீரின்றி நீண்ட நாட்கள் வாழக்கூடியனவாகவும் அம் மரத்தின் சகல பகுதிகளும் எமக்கு மிகுந்த பிரயோசனத்தைத் தருகின்ற இயல்புடையனவாகவும் காணப்படுகின்றது. அத்துடன் தாவர இனத்தின் வளர்ச்சிப் போக்கில் அதாவது அறுகம்புல்லாகத் தோன்றி பின்னர் பல்வேறுபட்ட சுவாத்தியம் காரணமாக வேறுபட்ட நில அமைப்புகளால் பல்வேறுபட்ட காலகட்டங்களில் அவ் அவ் வாழ்விட மாற்றம் காரணமாக வெவ்வேறுவித வகைத் தாவரங்களாக மாற்றமடைந்த தாவர இனத்தின் அதி உயர் இறுதி வடிவமாக பனை மரத்தினையே நாம் கருதுகின்றோம்.

இப் பனை மரத்தில் மட்டுமே ஆண் பெண் பால் வேறுபாடுகள் தோன்றியுள்ளமையையும் காணக்கூடியதாக உள்ளது. தென்னைக்கு மட்டும் ஒருவிதையில் மூன்று கண்கள் உருவாகியுள்ளன. இம் மரம் கன்ம ஆற்றலினைக் கூட்டியதும் சேர்மான அணுத்தொகை கூடி பனையாக உருவாகியதும் மூன்று விதைகளையுடைய பனங்காயை உருவாக்கி ஒரு கனியில் மூன்று சந்ததியை உருவாக்கும் வலிமையைப் பெற்றுள்ளது. தீ அணு கூடுதல் செறிவு காரணமாக மழை இல்லாது போனாலும் நீரின்றி பல வருடம் தாங்கக்கூடிய சேர்மான அணுத் தொகையை தூல உடல் மூலமாக ஆன்ம அலையிலும் உருவாக்கிக் கொண்டது. சிறு விதையாக இருந்தபோது இருந்த அணுக்கூறு அவற்றின் கன்ம ஆற்றல் காரணமாக தமது வளர்ச்சியில் வேகங்காட்டுகின்றன. அவ் வேளைகளில் அவற்றின் அணுத் தொகைகள் ஆன்ம அலையில் உடனுக்குடன் பதிவாகி அங்கு அவையவை தத்தம் உச்ச பயனை அடைவதற்காக அப் பொருளில் சேர்மானமாகின்றன.

மரங்கள் காலஞ்செல்ல ஆன்ம அலையிலுள்ள அணுத்தொகை மாற்றத்துக்கமைய வேறொரு விருக்ஷமாக மாறுகின்றன. அறக்கீரை என்ற சிறு தாவர இனம் தற்போது உருவவேறுபாடான இனமாக மாறியுள்ளமை சகலருக்கும் புலனாகின்றது. அதற்குக் காரணம் அது தன் கன்ம ஆற்றலால் ஆன்ம அலையில் பெற்ற சேர்மான அணுத்தொகை வித்தியாசமேயாகும்.

## மூவறிவு உயிரினங்கள் :

மூவறிவு உயிரினங்களான ஊர்வன பெரும்பாலும் விஷ செந்துக்களாகவே காணப்படுகின்றன. இவை பெரும்பாலும் ஒளிபடாத புற்று நிலங்களில் வசிப்பதாலும் சுத்தமான காற்று இல்லாத சூழலில் புற்றுக்கள் இருப்பதாலும் விஷம் உள்ளவையாகவே இருக்கின்றன. இதனால் அவற்றின் சேர்மான அணுத் தொகைகளில் தீயணு மிக மிகக் குறைபாடாக இருத்தலை உணர முடிகிறது. சாதாரணமாக நாம் இவ்விஷ செந்துக்களில் ஒன்றைப் பிடித்து வெயிலில் விட்டால் அது அவ்விடத்தை விட்டு விரைவாக மறைவான இடம் தேடி ஓடி ஒழித்துக் கொள்வதைக் காணலாம். அதாவது அச்செந்துவின் அணுச் செறிவில் ஒளி அணுத்தொகை மிகக் குறைவாக காணப்படுவதினால் அதன் இயல்புக்கு ஒளி ஒவ்வாததாகக் காணப்படுதலேயாகும். அது போல் விஷ செந்துக்களைப் பிடித்து நன்றாக வெய்யில் படுமிடத்தில் வைத்திருந்தால் அதன் விஷம் குறைவடைகின்றது. அதாவது தீயணுச் செறிவு அவ்விஷ செந்துவின் அணுத்தொகையில் மாற்றத்தை ஏற்படுத்துவதால் விஷத்தன்மை குறைவடைகிறது.

வெளியில், ஒளியில் உலாவித் திரியும் எந்த ஒரு ஊர்வனவும் விஷம் உள்ளனவாக இருப்பதில்லை. இருளில் நடமாடுகின்ற செந்துக்கள் அனைத்தும் விஷ செந்துக்களாக இருப்பதனையும் அவை பகல் வேளைகளில் உலாவித் திரிவதை மிக அரிதாகவே காணக்கூடியதாக இருப்பதையும் அவதானிக்க முடிகிறது. பெரும்பாலான பாம்புகள் விஷப்பாம்புகளாக இருப்பதையும் சாரைப்பாம்பு விஷமற்றதாக இருப்பதையும் காண்கிறோம். அதன் காரணம் வெளி உலகில் உலவுகின்றதாக சாரைப்பாம்பு காணப்படுவதையும் ஏனைய வகைப் பாம்புகள் இருளில் மட்டுமே உலவுகின்றமையும் காணலாம். பகலில் உலவுகின்ற பாம்பின் தீயணுத் தொகை இரவில் உலவுகின்ற பாம்புகளின் தீயணுத் தொகையிலும் பார்க்க கூடுதலாக இருத்தலே காரணமாகும் என்பதை உணர முடிகிறது. எவ்வித உயிரினமாயினும் தீயணுச் செறிவு குறைவான உயிரினங்கள் விஷம் செறிந்தவையாக இருத்தலை நாம் காணலாம்.



உள்ளொன்று வைத்து வெளியில் ஒன்று பேசும் மனிதர் எவராயிருந்தாலும் அவர்கள் சுவாசிக்கும் காற்றில் விஷ அணுச்செறிவு சிறிது சிறிதாகச் சேர்ந்து அவர் இறக்கும் காலத்தில் அவரது ஆன்ம அலையிலுள்ள காற்றணுவின் விஷ அணுத் தொகைக்குரிய பிறவிகளில் அவரைப் பிறப்பிக்கின்றது. இவர்களின் ஆன்ம அலையில் இத்தகைய செயற்பாடுகள் முன்பு பதிவாகி இருத்தலே காரணமாகும். சூக்கும தேகத்தில் வியாபித்திருக்கும் ஆன்ம அலையானது அவ்வத் தொடர்பிலுள்ள உயிர்களின் ஆற்றல் மூலம் செயல் வடிவம் பெறுகின்றன. வானொலி அலையினை எடுத்துக் கொண்டால் ஒரு நிலையத்திலிருந்து ஒலிபரப்பப்படும் ஒலியலையானது எமது காதுகளுக்கு நேரடியாகக் கேட்க முடியாத அளவு அலைவுகளாக விரிவுபடுத்தப்பெற்று அலையவிடப்படுகிறது. இவ்விடத்தில் ஒலியைப்பற்றி மேலதிகமாக பார்க்கும் தேவை எமக்கு ஏற்படுகின்றது.

## ஒலி அலையும், ஆன்ம அலையும்

அதிரும் பொருட்கள் ஒலியை உருவாக்குகின்றன. குரல் வளைக்கு குறுக்காக உள்ள குரல் நாண்கள் காற்றில் அதிருவதினால் எழுவதுதான் நமது பேச்சு ஒலி. அவ்வாறே ஒரு மிருதங்கத்தில் நன்றாக ஈந்து விரிக்கப்பட்ட தோல் கை விரல்களினால் தட்டப்படும் போது அதிர்வதினால் ஏற்படும் ஒலி மிருதங்க ஒலியாகும். அதுபோல் ஒரு நிலையான காந்தப் புலத்தினுள் நிலையற்ற காந்தப்புலம் ஒன்று தோற்றுவிக்கப்படும்போது அதனுடன் தொடர்பு பட்டிருக்கும் கூம்பு வடிவமான கடுதாசி அதிர்வதனால் ஏற்படும் ஒலியினை ஒலி பெருக்கியின் ஒலி எனவும் கூறலாம். ஒரு செக்கனில் நிகழும் அதிர்வு எண்ணிக்கை ஒலியின் அதிர்வு எண் (FREGUENCY) எனப்படுகின்றது. இது (HERZ) கேட்ஸ் என்றும் அலகில் அளவிடப்படுகின்றது. 20 HZக்கும் 20000HZக்கும் இடைப்பட்ட அதிர்வெண்களை உடைய ஒலிகளையே எம்மால் சாதாரண மனித செவியால் கேட்க முடியும் ஆனால் 20,000 அதிர்வுகளுக்கு மேற்பட்ட ஒலிகளை எம்மால் கேட்க முடிவதில்லை.

எனவே நம் காதுகளால் நேரடியாகக் கேட்க முடியாத அதிர்வெண் கொண்ட ஒலி அலைகளை உருவாக்கி அவற்றினை காற்றினில்

அலைய விடுகின்ற செயலையே ஒரு வானொலி நிலையம் செய்கின்றது. அவ்வாறான அலைகளை எமது வானொலி மூலம் நெறிப்படுத்தி சாதாரண காதுகளுக்குக் கேட்கக் கூடியதான நிலையினை நம் வானொலிப் பெட்டி செய்கின்றது. இவ்வாறு பல நூற்றுக்கணக்கான வானொலி நிலையங்களிலும் இருந்து அலைய விடப்படும் அலைகள் வெவ்வேறு அதிர்வெண் கொண்டவையாக அலைய விடப்படும் போது அதற்குரிய அதிர்வெண்களை பிரித்தெடுத்துச் செய்யும் செயலை நமது வானொலிப் பெட்டி செய்கின்றது. இவ்வலை அவ்விடத்தில் இருப்பதற்கான அறிகுறி எவ்விதத்திலும் தென்படுவதில்லை.

தென்படாத காணமுடியாத இவ்வலைவுகளை ஒத்ததே ஆன்ம அலையாகும். சூக்கும தேகத்தில் வியாபித்திருக்கும் ஆன்ம அலைச் சக்தி மனிதனின் கன்ம ஆற்றலுக்கு ஏற்ப சேர்மான சக்திப் பகுதிக்குச் செல்கின்றது. நம் புராண இதிகாசங்களிலே அசரீரி என்றொரு வார்த்தையை பிரயோகித்துள்ளார்கள். உண்மையில் அசரீரி என்பதும் ஒருவகையில் 20,000 மேற்பட்ட அதிர்வெண் கொண்ட ஒலி அலையே ஆகும். இவ் ஒலி அலையினை கேட்கக் கூடிய கன்ம ஆற்றல் பெற்ற மனிதனுக்கு மட்டுமே இது கேட்கக் கூடியதாக இருந்துள்ளது என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம். கன்ம ஆற்றல் வலிமை கூடுதலாக உடையவனுக்கு தீயணுவின் விகிதாசாரம் கூடுதலாக இருப்பதே காரணமாகும். தீயணுவை கூடுதலான தொகை சேர்க்கக் கூடிய முறையில் நல் வழிகளில் எமது சேவைகளைச் செய்வதன் மூலம் பிறப்பறுக்கின்ற ஞான நிலையை அடையலாம், பொதுவாக நாயன்மார்கள் பெரியளவில் தோன்றியுள்ளமை தமிழ் நாட்டில் என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். அப்பகுதிகளில் தீயணுவின் விகிதாசாரம் கூடுதலாகக் காணப்படுவதே காரணம் என்பதை உணர முடிகின்றது.

## சக்திகளின் சேர்மான ஆராய்வு

சைவசித்தாந்தத்தை பல ஞானிகள் ரிஷிகள் நாயன்மார்கள் தோன்றியே உருவாக்கி உள்ளார்கள். இப் பிரபஞ்சத்தின் உண்மை நிலையை ஆராய்ந்து தீயணு சேர்மானம் கூடியதால் உண்மையை அறிந்து இந்து சமயத்தில் கடவுள்களை உருவாக்கி உள்ளார்கள். இப் பிரபஞ்சத்தின் மூலப்பொருளான சூரியனை சூரியன் எனக் குறிப்



பிடாது சிவபெருமான் என சைவ சமயத்தில் குறித்துள்ளனர். சூரியனுக்கு எவ்விதம் தாய் தந்தையரைக் குறிப்பிடாதது போலவே சிவபெருமானுக்கும் குறிப்பிடப்படாமை இங்கு உற்று நோக்கக் கூடியதாகும். சூரியனின் தீப்பொறியான பூமியில் இருந்து வெடித்துச் சிதறிய சந்திர கோளத்தை சந்திர கோளம் எனக் குறிப்பிடாது சிவனின் சக்தியான உமாதேவி எனக் குறிப்பிட்டுள்ளார்கள்: சூரியனுக்கு மிகத் தூரத்தில் இருக்கும் சூரியனிலிருந்து உருவான மிகப் பெரிய வியாழக் கிரகத்தை சிவனுக்கும் உமாதேவிக்கும் பிறந்த மூதல் பிள்ளையான பெரிய ஆனைமுகத்தை உடைய விநாயகர் எனக் குறிப்பிட்டுள்ளார்கள், (அறிவுப் பொருள்) புதன், சனி, வியாழன், செவ்வாய் ஆகிய நான்கு கிரகங்களையும் சிவனின் நான்கு புத்திரர் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

இவற்றில் வியாழனை _ _ ) (காற்று) தந்தை தாய் இருவரும் உருவாக்கியதாகவும் செவ்வாய் (ஞான ஒளி அணு) சிவபெருமானின் நெற்றிக்கண் அக்கினியில் இருந்தும் புதன், சனி கிரகங்கள் (நீதி நியாயத்திற்குரிய ஆகாய பூதம்) சிவபெருமானின் உடல் அக்கினியில் இருந்தும் உருவானதாக புராணம் கூறுகின்றது

இவ்விடத்தில் மத்துவ வேதம் கூறும் கருத்தை உற்று நோக்கும் போது இறைவனின் புத்திரரான வாயுவின் உதவியின்றி இறைவனை அணுக முடியாது எனக் குறிப்பிட்டுள்ளார்கள். தீப் பொருளான இறைவனை இறை புத்திரனான காற்றின் உதவியின்றி அணுக முடியர்து என்பது ஐந்துவித சக்திகளைத்தான் கடவுளாக வகுத்துள்ளார்கள் என்பதை உணரவாய்ப்பேற்படுகின்றது. தீயின் மீது காற்றுப் பட்டால்த்தான் ஒளியணு உண்டாக முடியும். எமது சமயத்தில் நாயன்மார்கள் வரலாற்றில் நாயன்மார்கள் ஒளியில் இரண்டறக் கலந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்கள். நாம் செய்யும் கபடமற்ற நற் கருமங்களால் உடலில் நீர் சக்தி குறைந்து தீச் சக்தி மேலோங்கி நிற்கின்றது. நாயன்மார்கள் உழவாரைத் தொண்டு, நந்தவனம் அமைத்தல், ஆலய சுத்தம் பேணுதல், நீர் ஊற்றுதல் என்பன போன்ற சுய நலம் அற்ற உண்மை நிலையில் ஆற்றிய பணியால்தான் ஆன்ம அலைச் சக்தியில் மாற்றம் ஏற்பட்டு நீர் அணுக் குறைந்து ஒளியணுக் கூடி ஞான ஒளியில் முத்தியடைந்துள்ளவர். இவ்வாறு தீ, ஒளி அணு ஆன்ம அலையில் கூடும்போது நீர் அணு வற்றி இல்லாமல் போகின்

றது. ஐந்துவித சக்திகளில் ஒருவித சக்தி இன்றி எப்பொருளும் உருவாக முடியாது. இக் காரணத்தால் பிறப்பை நீக்க முடிகிறது. ஒருவித சக்தி இல்லாமல் போனதும் மிகுதி நாலு சக்திகளும் அவ் அவற்றின் சக்திகளுடன் சேர்ந்து விடுகின்றன. ஒளியணுவில் (முத்தி) சேர்வதைத்தான் இறைபதம் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

பூமி நிலப்பரப்பில் மேற்கு நிலப்பரப்பு உயரமான இடங்களில் கிழக்கில் உதிக்கும் சூரியனின் தீச்சக்தி கூடுதலாகச் செறிவாகின்றது இதன்படி இந்தியாவின் தமிழ் நாடு - யப்பான் - இலங்கையின் வடகிழக்கு மாகாணங்கள் அமைந்துள்ளது. சைவசமய ஆலயங்கள் கிழக்கு வாசலாக அமைத்ததில் இருந்து தீயணுச் சேர்மானங்களுக்கு சைவ சமயம் கொடுத்த முதல் நிலையை உணரலாம். சன்மார்க்க நெறி விபுலானந்தரும் கிழக்கு மாகாண மட்டக்களப்பு காரைதீவில் மேற்கு உயரமான பகுதியிலேயே அவதரித்துள்ளார். இப்பகுதிகளில் ஏனைய வித அணுச் சேர்க்கைத் தொகைகளில் வெவ்வேறு இடங்களின் அணுச் சேர்க்கைகளோடு ஒப்பீடு செய்கையில் தீயணு விகிதாசாரம் கூடுதலாக காணப்படுகின்றமையை நாம் காணலாம்.

தீயணுச் சேர்க்கை கூடுதலான மனிதன் அறிவாளியாக ஞானியாக வருகின்ற சாத்தியப்பாடுகள் கூடுதலாக உள்ளதை எம் சிந்தனை மூலம் கண்டு கொள்ளலாம். மணிவாசகர் தம் மந்திரிப் பதவியை உதறித் தள்ளிவிட்டு பிறப்பை நீக்கும் நோக்கத்திற்கான கஷ்டங்களை அனுபவித்தார். இது எவராலும் செய்யக் கூடிய காரியமல்ல. அவருக்கு அமைந்த அணுத்தொகையில் தீயணுக்கூடுதல் சேர்மானமே காரணமாகும். வள்ளுவருக்கு அமைந்த அணுத்தொகையின் சேர்மானம் உலகில் வேறு எவருக்கும் அமையவில்லை. வள்ளுவர் இயற்றிய திருக்குறள் முழு உலகையும் ஆட்கொண்டு இருக்கின்றது. இவரும் மேற்கு உயரப் பிரதேசமான தமிழ் நாட்டில்தான் அவதரித்துள்ளார் இவ்வாறானவர்களின் சேர்மான அணுத் தொகையில் தீ அணு கூடுதலாக அமைந்துள்ளதே காரணமாகும். தீயணுச் சக்தி உடல் கஷ்டம் பாராத கடும் உடலுழைப்பால் ஏற்படுகிறது. இப்பகுதிகளில் வாழ்கின்ற மனிதர்கள் பெரும்பாலும் ஆற்றலறிவு கொண்டவர்களாக காணப்படுவதை நோக்குகையில் இலங்கையின் வடக்கு கிழக்கு மக்கள்



தென்பகுதி மக்களிலும் பார்க்க கல்வியிலும், ஆற்றலிலும், உண்மையிலும் கூடிய அளவுள்ளதைக் காணலாம்.

தெற்கு மேற்குப் பகுதி நீரணுச்சக்தி கூடுதலான விகிதம் கொண்டதாகவும் காணப்படுகின்றது. வடகிழக்குப் பகுதி தீயணுச் சக்தி கூடுதலாகக் காணப்படுவதே காரணமாகும். யப்பான் கிட்டம் குறைந்த பூமிப்பரப்பு உள்ளதால் அங்கு நிலநடுக்கம் பூகம்பங்கள் அடிக்கடி காணப்படுகின்றது. தீயணுத் தொகை கூடுதலாக உள்ளமையே பூகம்பங்களுக்குக் காரணமாகும். அங்கு வாழும் உயிரினங்களும் தீயணுத் தொகை கூடுதலானவையாகவே காணப்படுகின்றது. இங்குள்ளவர்கள் அறிவாளியாகவும் திறமைசாலியாகவும் காணப்படுகின்றனர். தீயணுத் (ஒளி) தொகை கூடுதலாக உள்ளவர்கள் உயிர் பிரிய வரினும் பொய் கூறமாட்டார்கள். உண்மையே தெய்வம் என்பதை சிந்தனையாக்கி பூகம்பங்கள், அணுகுண்டுக்குப் பயப்பட மாட்டார்கள் வேறு ஒருவரிடம் கையேந்தாதவர்களாகவும் உதவும் மனப்பாங்கு உடையவர்களாகவும் சிறந்த தொழில் முயற்சியாளர்களாகவும் ஞான அறிவாளர்களாவும் காணப்படுகின்றனர். தீச்சக்தி சேர்மானம் கூடுதலான பகுதிகள் எவ்வகையான உயிர் இனங்களை உண்டு பண்ணுகின்றது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

மண்புழு மண்ணுக்குள் வாழ்வதாலும் அவ்விடம் ஈரலிப்பான இடமாக இருப்பதினாலும் தீயணுக் குறைவு காரணமாகவும் மண்புழுவுக்கு கண் உருவாகவில்லை. விலங்கினமும், மனித இனமும் தீயணுச் சேர்மானம் கூடியதால் வயிற்றிலே கருவை உருவாக்கி பிரசவிக்கின்றன. ஊர்வன, பறவைகள் கருவை வயிற்றினில் உருவாக்க முடிவதில்லை. முட்டையில் உருவாக்குகின்றது. பொதுவாக தீயணுக் குறைவு காரணமாகவே கண்பார்வைக் குறைவும் காதுகேளாத் தன்மையும் உண்டாகின்றது. தீயணுவின் தன்மை மேலும் கீழ்நிலையடையும் போது கண்பார்வை முற்றாகத் தடைப்படுகின்றது. கடைசிக் காலம் இறக்கும்போது கண்பார்வை முற்றாகவே தடைப்பட்டுஇருந்தால் எதிர்வரும் பிறப்பு கீழ்நிலையை அடைகிறது. கண்பார்வைக் குறைவு மனித இனத்துக்கு மட்டுமே ஏற்படுகின்றது. மற்றைய பிராணிகளுக்கு மிகவும் குறைவாகவே காணப்படுகின்றது. மனிதனின் சுயநல நோக்கத்தினாலும் பகட்டு வாழ்க்கை மனநிலையினாலும் ஆசை (நீர் அணுக்கூடி தீஅணுக் குறைவதினாலேயே இவை ஏற்படுகின்றது. தற்

கால விஞ்ஞான ஆராய்வின் மூலம் மூன்றாவது நெற்றிக் கண் இருப்பதாகக் கண்டுள்ளார்கள். சிவபெருமானது நெற்றிக் கண்ணில் இருந்து ஒளியணு முருகன் தோன்றியதாக புராணம் கூறுகின்றது. தியாக சேவையாலும் கடும் உடலுழைப்பாலும் ஆன்ம அலையில் பதிவாகும் அணுச் சேர்க்கையில் ஒளியணு ஏராளமாக அதிகரித்தால் நெற்றிக் கண் மூலம் ஞான அறிவு ஏற்பட வாய்ப்பு உண்டாகின்றது.

## அணு

சமணம் - வைசேடிகம் - மீமாம்சம் முதலிய சமயங்கள் பிரிக்க முடியாத சிறு பருமனைக் குறிக்கும் ஒரு பொருளாக அணுவைக் குறிப்பிடுகிறார்கள். உயிர் இனங்கள் உருவாகுவதற்கு அணுச் சக்தி மூல காரணமாகும்.

அணு என்பது மேற் கொண்டு பிரிக்கப்பட முடியாத ஒரு அளவு கோல் என நாம் கருதுகிறோம். வேறு சிலர் அதைப் பொருளாகக் கருதுகின்றனர். ஆன்ம அலையில் உள்ள அணுச்சக்தி சக்தியில் வேறுபட்டது. அதாவது ஒரு அணுவின் சக்தி பூமியில் 100 லட்சம் அணுவுக்கு சமனானதாகும். 1 வேப்பம் விதையை நாம் நட்டாலோ வேறு எவ்விதைகளை நட்டாலோ அவ்விதையின் நூறு லட்சம் விதை அளவு பொருள்களை மரம் இலை, காய், பூ, என பலவிதமாக உற்பத்தி செய்து தருகின்றது.

## கன்மம்

மீமாம்சம் : கன்மமே முக்கியமான சக்தி எனவும் - சமணம் ; கன்மத்தைக் கடவுளெனவும்- சைவசித்தாந்தம்; பழம் பிறப்பும் பழவினையும் உண்மையானது பற்றற்ற வினையே பிறப்பை ஒழிக்கும் எனவும் கூறுகின்றது.

தூலதேக கன்ம ஆற்றலாலே சூக்கும தேக ஆன்ம அலையிலுள்ள அணுச்சக்திகள். அதற்குரிய பதிவுகளை மேற் கொள்கின்றன நாம் செய்கின்ற செயல்களின் பலாபலன்களை கள்ளங் கபடமற்ற கன்ம ஆற்றலின் மூலம் மாற்றி அமைக்கலாம். நாம் செய்யும் நற் செயல்களை மென்மேலும் அதிகரித்துக் கொண்டே செல்லும் போது அதற்குரியதான சக்திச் சேர்மான அணுத்தொகைகள் பதிவாகின்றன.



கடும் உழைப்புக்கு ஆன்ம அலையில் தீயணு பதிவாகின்றது. அந்த உழைப்பு பல சீவராசிகட்கும் பயன் உடையதாக இருந்தால் மட்டுமே சேவைக்கான தீயணுவாய்ப் பதிவாகும். பகட்டு வாழ்க்கைக்கான முறையில் உழைக்கும் போது ஆன்ம அலையில் ஆசை அணுவாகப் பதிவாகின்றது. 'வேறு மக்களிடம் பணம் பெற்றுச் செய்யும் தான தருமங்கள் செய்பவரது ஆன்ம அலையில் காற்றணுவாய்ப் பதிவாகின்றது. பாராட்டுவிழா, பட்டமளிப்புவிழா செய்பவர்க்கும் காற்றணுவாகப் பதிவாகின்றது. ஆலய சேவைகளிலும் மற்றைய உயிரினங்களுக்கு பயன் தராத சேவையால் ஒளியணு உருவாக முடியாது. மரம் நடுதல், மரங்களுக்கு நீர் ஊற்றுதல், சூழல் துப்பரவு செய்தல் முதலிய செயல்கள் செய்பவருக்கு ஒளியணுவை உருவாக்குகின்றது. இச்செயல்கள் மறு சீவராசிகளின் உணவுத் தேவைக்கு வழிவகுக்கின்றது. இலவச மருத்துவ சேவையால் உயிரினங்கள் உடல் நலம் பெறும்போது அவ்வுயிரினங்கள் வினைப்பயன் ஆற்றலைப் பூரணமாய்ச் செய்ய முடிகின்றது ஆகவே இச் செயல்களும் ஒளியணுவை உருவாக்கும் முயற்சியாகும். யப்பான், சிங்கப்பூர் மக்களின் சிந்தனைகளைப் பின்பற்றி மக்கள் கருமமாற்றினால் பிரச்சனைகள் நேர இடமில்லை. இயந்திரம் இயங்குவதற்கு தூயகாற்று முக்கியம். காற்றுப் போகும் பாதை அடைத்து விட்டாலோ காற்று கூடுதலாகப் போனாலோ போன காற்று வால்வ் மூலம் சரியான முறையில் இயங்காது விட்டாலோ இயந்திரம் இயங்க முடியாது. தீச்சத்தியை இயந்திரம் உருவாக்கினாலே இயந்திரம் சக்தியைக் கொடுக்கும். இவ்வாறு உயிரினங்களின் கடும் உழைப்பின் மூலமே ஒளியணுச் சேமிப்புக் கூடி மேல்நிலைப் பிறவியை அடைய முடிகின்றது.

நற்பதிவுகளின் பலாபலனாக மேல்நிலைப் பிறப்பையும். மென்மேலும் நற்செயல் ஆற்றலை அதிகரித்துக் கொண்டே செல்கையில் பிறவா நிலையையும் அடைய முடியும். ஆன்ம அலையின் அணு சக்திப் பதிவுகளுக்கு ஏற்பவே கருமங்கள் ஆற்றுகின்றோம். அக்கட்டளையை மாறி நாம் செயற்பட முடியாது. அதிலிருந்து வரும் 1 அணுச் சக்தி பூமியில் 100 லட்சம் (1கோடி) அணு ஆற்றலைத் தருகின்றது. கூடுதலாக 200 லட்சம் அளவு கருமமாற்றினால் திரும்பி ஆன்ம அலையில் அதற்குரிய வகையான 2 அணுவாகப் பதிவாகிறது. இவ்வாறு தூல உடலில் உயிர் பிரியும் போது ஆன்ம அலையிலுள்ள அணுத்தொகைக்கு ஏற்ப மறுபிறவி வந்தடைகிறது.

பல ஆயிரம் வருடங்களுக்கு முற்பட்ட காலத்திலே ஒரு அரசன் போர் செய்யும் போது அவன் பிரயோகித்த பாணமானது ஒருபாணம் பத்தாகவும் பத்து நூறாகவும் நூறு ஆயிரமாகவும் இப்படியே பத்துப் பத்தாக பத்துத் தரம் பெருகிய நூறு கோடி பாணங்களால் மாற்றானுடன் போர் செய்து வென்றதாக வரலாறு கூறுகின்றது. ஆனால் நாம் இதைக் கற்பனைக்கதை எனவே எண்ணியிருந்தோம். இன்றைய விஞ்ஞான காலகட்டத்திலே இது முழு உண்மை என்பதை அறியக் கூடியதாக உள்ளது. ஜேர்மனி தேச கிட்லர் இந்தியாவிலிருந்து விஞ்ஞான ஏடுகளை எடுத்துச் சென்று கணைகளை உருவாக்கி ஆங்கிலேயருடன் போர் செய்ததும் அமெரிக்கா அவரை வென்று ஜேர்மனியிலிருந்து அவ் ஏடுகளை எடுத்துச் சென்று அணுக்குண்டை உருவாக்கி யப்பானில் போட்டு யுத்தத்தில் வென்றதும் யாவரும் அறிந்ததேயாகும். இச்சம்பவத்தில் இருந்து தான் அணுகுண்டு போன்ற சக்திமிக்க பொருட்களை உருவாக்குகின்றனர்,

எல்லா உயிர்களினதும் ஆன்ம அலையில் இருந்து வரும் ஒரு அணுச்சக்தி தூலதேகத்தில் 100 லட்சம் பங்கு ஆற்றலைச் செய்ய முடிகின்றது. இவ்வாறு நாம் செய்யும் 100 லட்சம் அணு ஆற்றல் திரும்ப ஒரு அணுவாக ஆன்ம அலையில் பதிவாகின்றது. சோம்பல் காரணமாக 100 லட்சம் அணு ஆற்றலை நாம் உருவாக்க முடியாவிடில் வாங்கிய கடனைத் திருப்பி செலுத்த முடியாத கடனாளியாக ஏற்பட இடமுண்டு. அதற்காக பலபிறப்பு பிறக்க வேண்டி நேரிடும். ஒவ்வொரு செயல்களுக்கும் ஆன்ம அலையில் அச்செயல்களுக்குரிய சக்தி நிறங்களில் பதிவாகின்றது. ஒருவருக்கு நியாய முறையில் உதவினால் வெள்ளை நிறத்திலும், நியாயம் தவறி ஏசினால் அதற்குரிய நீலநிறத்திலும் பதிவாகின்றது. நமது பிறப்புக் காரணமாக சூரியனுக்குச் செலுத்த வேண்டிய கடனை செலுத்தாமல் சோம்பேறிகளாக வாழ்ந்து கொண்டு இருப்போமானால் கீழ்நிலைப் பிறப்பை அடைந்து மீண்டும் பிறந்து பிறந்து பிறப்பை நீக்க முடியாது பிறந்து கொண்டே இருப்போம்.

கன்ம ஆற்றலின் சக்தியால் பிறப்பு மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஓரறிவு உயிரினம் தன் கன்ம ஆற்றலைக் கூட்டி ஈரறிவு உயிரினமா



கவும் பின்னர் ஆற்றல் அதிகரிப்பின் மூலம் மூவறிவு நாலறிவு ஐந்தறிவு உயிரினமாகவும், ஆறறிவு உயிரினமாகவும் மாற்றமடைந்துள்ளன. ஆன்ம அலை உருவான ஆரம்பகாலத்தில் 10 எண்ணிக்கைக் கணக்காகச் சேர்ந்த அணுத்தொகை கன்ம ஆற்றல் காரணமாக நூறு, ஆயிரம், இலட்சம், கோடிக்கணக்கில் உயர்ந்ததும் அறிவுத்திறன் கூடி இரண்டறிவு, மூவறிவு, நாலறிவு, ஐந்தறிவு, ஆறறிவு உயிரினமாக வரமுடிந்தது. சூக்கும தேக ஆன்ம அலையிலிருந்து அனுப்பும் சக்திக் கட்டளைக்கு அமையவே உயிர் இனங்களின் தூல உடல் வேலை செய்கின்றது. தூல உடல் செய்யும் கன்ம ஆற்றல் சக்தி திரும்பி சூக்கும தேக ஆன்ம அலையில் அணுவாக சேமிக்கப்படுகிறது.

இவ்வாறு உயிர் இனங்கள் தூல உடல் மூலம் ஆன்ம அலையில் சேமிக்கும் சேர்மான சக்தி கூடக்கூட மறுபிறவியில் மேல்வகுப்பு உயிர் இனமாய் பிறக்க முடிகிறது. குரங்கின் கபடமற்ற கடும் ஆற்றல் மூலம் பகுத்தறிவு மனிதனாகப் பிறந்த மனித இனம் தனது கன்ம ஆற்றல் மூலம் ஒளியணு சேமிப்பைக் கூட்டி சூக்கும தேக ஆன்ம அலைக்கு அனுப்ப முடியாத காரணத்தால் கீழ்நிலைப் பிறப்புக்கு ஆளாகின்றது. கடும் ஆற்றல் மூலம் பகுத்தறிவை அடைந்த மனித இனம் பகட்டு வாழ்க்கையில் மோகம் கொண்டு பேராசை அணுவைக் கூட்டி தூல உடல் உழைப்பின் மூலம் ஒளியணுவைக் கூட்ட முடியாமல் மூன்று, நாலு அறிவு வர்க்க உயிர் இனமாகப் பிறக்கிறது. திரும்ப ஆற்றல் அறிவு கூடி மனித நிலைக்கு வர பல இலட்சம் வருடங்கள் செல்லலாம். கன்ம ஆற்றல் மூலம் சிலந்தி மாவலி மன்னனாக பிறந்ததெனப் புராணம் கூறுகின்றது. ஐந்தறிவு உள்ள குரங்கினம் தனது கன்ம ஆற்றல் அதிகரிப்பு மூலமாகமே மனித இனமாகப் பிறக்க முடிந்தது. மற்ற எந்த மிருக இனமும் செய்ய முடியாத ,,நிலத்திலிருந்து வயிற்றில் அணைத்த குட்டியுடன் உயரமான மேல் மரப்பரணுக்கு கண்ணிமைக்கும் நேரத்தில் பாய்தல்'' போன்ற கடும் கன்ம ஆற்றல் மூலமே பகுத்தறிவுள்ள மனித இனமாக பிறக்க முடிந்தது.

குரங்கின் கன்ம ஆற்றல் அவ்வாறு அமைந்திராவிடில் பகுத்தறிவு மனித இனம் தோன்றியிருக்க முடியாது. இதனால் குரங்கின் கன்ம ஆற்றலுக்கு மனித இனம் நன்றி கூற வேண்டும். ஒரு கார் வாகனத்தை தொழில் படுத்த முயற்சிக்கும் போது பற்றறியில் உள்ள

மின்சார சக்தி கார் எஞ்சினை இயக்குகிறது. எஞ்சின் இயங்கியதும் டைனமோ மூலம் உருவாகும் மின்சார சக்தி திரும்ப பற்றறியில் சேர்மானமாகிறது. பற்றியில் சேர்மானமான கூடுதல் மின்சக்தி எஞ்சின் இயக்கத்துக்கும் வெளிச்சத்துக்கும் பிரயோசனமாகிறது. மின்சார சக்தி எஞ்சின் இயக்குவதன் மூலமே உருவாகிறது.

சக்தி சேமிக்கும் இடத்தில் மின்சார சக்தி சேர்மானம் ஆகாது விட்டால் கார் ஓடவும் முடியாது. வெளிச்சம் வரவும் முடியாது. இவ்வாறே எமது உடல் இயங்குவதற்கும் ஆன்ம அலை அணுச்சக்தி வேலை செய்கிறது. ஆன்ம அலைக் கட்டளைப்படியே உடல் வேலை செய்யும். இவ்வாறே சூக்கும தேக அணுச்சக்திகளும் சேமிப்பில் உள்ள அணுத் தொகைக்கேற்ப தூலஉடல்மூலம் கருமங்களை ஆற்றி கூடுதலான ஒளியணு சேரும்வரை பிறந்து பிறந்து உழன்றே ஆகவேண்டும் கபடமற்ற கடும் உடல் உழைப்புச் சேவை மூலம் ஒளியணு சேமிப்பை அதிகம் கூட்டினால் குறுகிய காலத்தில் பிறப்பை நீக்க முடியும். இவ்வாறு மனிதனை பிறப்பறுக்கின்ற மேல் நிலையை அடையச் செய்து அதற்கான வழிவகைகளை உணர்ந்து ஏற்படுத்திக் கொள்ள உதவுவதே எமது கடனான கடமை நோக்கமாகும்.

சைவசித்தாந்தமும், வள்ளுவர் குறளும், திருவாசகமும் பற்றற்ற பின்பே பிறப்பு நீங்கும் எனக் கூறுகின்றன. ''வேண்டும் கால் வேண்டும் பிறவாமை'' என்கிறது குறள். ''கற்றாவின் மனம் போல கசிந்துருக வேண்டுவனே'' என்கிறது மணிவாசகர் திருவாசகம். குறள், திருவாசகம், சைவசித்தாந்தம் ஆகியவை கூறியதின் பிரகாரம் பிறவா நிலையை அடைவதற்குரிய வழிவகைகளை அறிய வேண்டிய கட்டாய கடன் நமக்கு உண்டு.

காசிப முனிவருக்கு மகனாகப் பிறந்த சூரன் எவரும் பெற முடியாத 108 அண்டத்தை 18 யுகம் அரசாளும் வரத்தை சிவபெருமானிடத்தில் நேரில் பெற்றுள்ளான். அரசாளும் வரம் காரணமாக பேராசை கூடி சேர்மான அணுசக்தி மாறுபட்டு அகங்காரம் கூடி ஒளியணு குறைந்ததும் சேவலும் மயிலுமாகப் பிறக்கின்றான். இங்கு எவ்வளவுதான் உயர்வானவனாகப் பிறந்தாலும் அவன் செய்கின்ற



கன்ம ஆற்றலுக்கு ஏற்ப ஆன்ம அலையில் பதிவாகின்ற சேர்மான அணுத்தொகைகள் எவ்வித முடிவினைத் தருகின்றனவோ அவ்வாறான முடிவினையே ஏற்கவேண்டி இருக்கும். இங்கு அவரவர் செயலுக்கு ஏற்பவே பிறப்பற்ற நிலையோ அல்லது கீழ் பிறப்பு நிலையோ ஏற்படுகின்றது என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம். பெரியவன், சிறியவன், உயர்ந்தவன், தாழ்ந்தவன், பட்டதாரி, தொழிலாளி, உயர்குலம், இழிகுலம் என்ற வேறுபாடுகள் இங்கு பிறப்பை அல்லது பிறவாமையை நிர்ணயிக்க முடியாதவையாகின்றன என்பதை உணரலாம். எனவே எவ்வாறாயினும் பிறவாநிலையை அடைய வேண்டும் என்பதே எமது வேண்டுகோளாகும்.

# வினைப்பயனால் உருவாகும் மறுபிறப்பு

மறுபிறப்பு உண்டு என்பதற்கு இங்கே நடந்த சில சம்பவங்களை நாம் அறிந்தளவில் உங்களுடன் பகிர்ந்து கொள்கின்றோம். தென் இலங்கை கதிர்காமப் பகுதியில் மன்னம்பேரி என்ற அழகுராணிப் பெண் தனது ஊரில் நடந்த வன்செயலால் இறந்து பின்னர் அயல் கிராமத்தில் பெண்ணாகப் பிறந்து தன் பழைய முன்னைய பிறவியிலுள்ள சுற்றத்தாரின் பெயர்கள், பாடசாலைப் பெயர், மாணவர் பெயர் முதலிய முழு வரலாற்றையும் கூறியுள்ளார். சிறீலங்கா இராணுவச் சிப்பாய் ஒருவர் பலாலி இராணுவ முகாமில் சூடுபட்டு இறந்து பின்னர் தனது சிங்களக் கிராமத்தில் பெண்ணாகப் பிறந்து தனது முன்னைய பிறப்பிலுள்ள சுற்றத்தாரின் பெயர்கள், பாடசாலைப் பெயர், மாணவர் பெயர்கள் முதலிய முழு வரலாற்றையும் கூறியுள்ளார். இவற்றை நோக்குகையில் மறுபிறப்பு உண்டு என்பதை உறுதியாக அறியக்கூடியதாக உள்ளது. திடீரென இறக்கும்போது அவரது சிந்தனை அலைகள் செயல்பெற்றவாறே இருக்கும். நோய்வாய்ப்பட்டு இறப்பவர்களின் சிந்தனை செயல் இழந்து மரணமடைவதால் மறுபிறப்பில் முற்பிறப்பு பற்றிய சிந்தனைகள் வர முடியாது. ஆகவே திடீரென இறப்பவர்கள் மூன்று நான்கு மாதங்களில் மறு பிறவியில் அவதரிக்கிறார்கள். இவர்களுக்கு முற்பிறப்பு பற்றிய சிந்தனையை வசூலித்துக் கொள்ள முடிகிறது. இராணுவ சிப்பாயாக உயிருடன் இருந்த போது செய்த வினைப்பயன் காரணமாக ஆன்ம அலையில் தீயணுக் குறைந்து நீரணுக் (ஆசை அணு) கூடுதலாகச் சேர்ந்ததால்

மறு பிறப்பில் ஆணாக வரமுடியவில்லை. இவ்வாறு மேறும் இரு ஆண்கள் மறு பிறவியில் பெண்களாய்ப் பிறந்ததை அறிந்துள்ளோம் மன்னம் பேரி பெண்ணாக இறந்து திரும்பவும் பெண்ணாகப் பிறந் ததால் ஆன்ம அலைச் சக்தி அணுத்கொகை அதிகம் மாறுபட வில்லை என்பதை உணர முடிகின்றது.

எமது ஊரில் உள்ள தோத்திரப் பாடலில் பக்திமிக்க கடவுள் பக்தர் ஒருவர் மருமகளைக் கொடுமை செய்தும் அவவின் காணியை அவ இறந்தபோது மகனுக்கு எழுதியும் செய்த தீய காரணத்தால் இவை நடந்த 18 வருடங்களின் பின் இறந்து அதன் பின் 1 வருடத் தில் பெண்ணாகப் பிறந்துள்ளார் இவருக்கு வயது முதிர்ந்ததும் இறக் கும் காலத்தில் கண்பார்வை முற்றாக இல்லாது இருந்தது. இவரது ஆன்ம அலையில் வினைப்பயன் காரணமாக தீயணுக் குறைந்ததால் கண்பார்வை இல்லாமல் போனதுடன் ஆணாகப் பிறக்கவும் முடிய வில்லை. அவரது சீவியகாலத்தில் விசேச கோயில் பூசை எந்தத் தினத்தில் செய்தாரோ அதே தின நாளில் பெண்ணாகப் பிறந்துள் ளார். பின்நாளில் கல்விகற்று தேவார திருவாசகங்களுக்குரிய சமய பாடங்களில் திறமையடைந்து பட்டதாரி ஆசிரியையானார். இவரின் 25 வயதின்பின் பிரயாணம் செய்கையில் வன்செயல் துப்பாக்கிச் சூட் டுக்கு இலக்காகி ஒரு கால் முறிந்து 1 வருடகாலம்வரை வயித்தியம் செய்து கால்முறிவை மாற்றியுள்ளார். சிறு தீங்கு செய்தாலும் அது பதிவாகி அதற்குரிய தண்டம் வந்தே தீரும். இதை மாற்ற முடி யாது. ஆகவே ஆன்ம அலையில் பதிவாகும் தீவினை அணுக்களின் பெறுபேறுகள் காலாகாலத்தில் செயற்பட்டே ஆகும் என்பதை உன் னிப்பாகக் கவனிக்க வேண்டும்.

இன்னும் ஒரு ஆண் இறந்தபின் ஆணாகப் பிறந்த விபரம் வருமாறு. பொதுத் தொண்டில் கூடுதலான திறமையும் சேவை எண் ணமும் கொண்ட ஒரு கோவில் மனேஜர் கோவில் பூசை விவகா ரத்தில் ஐயருடன் வாக்குவாதப்பட்டு கடும் கோபம் கொண்டிருந்தார் அதனால் மாலை இருட்டில் ஐயர் போகும் வழியில் வைத்து வேறு இருவரைக் கொண்டு ஐயருக்கு அடிப்பித்துள்ளார். சிறிது காலம் செல்ல அவருக்கும் அவரது மனைவிக்கும் ஏற்பட்ட தகராறு காரண மாக நஞ்சருந்தி அடுத்தநாள் இறந்து போனார். இறந்த மூன்று



மாதங்களில் திரும்ப ஆணாகப் பிறந்துள்ளார். அதன்பின் உரிய காலத்தில் கல்விகற்று கல்வியில் மேல் நிலையடையவில்லை. இருபத் திரண்டு வயதில் இஸ்கூட்டரில் பயணம் செய்யும்போது முச்சந்தி ஒன் றில் லொறியால் மோதப் பெற்று தலையில் வெடிப்பு ஏற்பட்டது. அதன்பின் பல சிகிச்சைகள் செய்து ஆறு மாதத்தில் காயத்தை மாற் றியுள்ளார். இவர் முற்பிறவியில் செய்த பொதுச்சேவை நல்மனம் நல்லுழைப்புக் காரணமாக திரும்பவும் ஆணாகப் பிறந்துள்ளார். முன் வினைப்பயன் பெறுபேறுகளை அனுபவித்துள்ளார்.

## பிறவா நிலை அடைதல்.

9 கிரகங்களில் பூமியின் நிழலான கிரகங்கள் இரண்டை நீக்கி மிகுதி ஏழு கிரகங்களின் சக்திகள் ஏழு நிறங்களில் பிரதி பலிக்கின் றன. இவ் ஏழு கிரக சக்திகளே இப்பூவுலக பிரபஞ்சத்தை நிர்வகிக் கின்றன. இவற்றில் வெள்ளிக் கிரகத்தின் ஆசைப் பொருளான நீல நிற சக்தியை நீக்கி மிகுதி ஆறு கிரக சக்திகளையும் சிவபெருமானின் குடும்ப சக்தி என சைவசித்தாந்தம் ஆராய்ந்து நிர்ணயித்துள்ளது. உயிரினங்கள் உற்பத்திக்கு காற்றுச்சக்தி முதலாவதாக அமைவதால் முதல்வணக்கத்தை காற்றுப் பொருளான விநாயகனுக்கு கொடுத் துள்ளார்கள். சிவபெருமான் முப்புரம் எரிக்க புறப்பட்டுச் சென்ற போது விநாயகனைக் கூட்டிச் செல்லாத படியால் முப்புரம் எரிக்க முடியவில்லை என சமய புராணம் கூறுகிறது. தீ எரிவதற்கு காற்று முக்கியம், ஆகவே இது முற்றிலும் சரியானதே. உயிரினங்களின் சிந்தனை எவ்வாறு செயல் பெறுகிறதோ அதற்குரிய கிரக சக்தி அக் கிரகத்திற்குரிய நிறங்களில் ஆன்ம அலையில் சேர்மானமாயிருக்கும். எந்தக் கிரகசக்தியின் நிறம் கூடுதலாக ஆன்ம அலையில் உள்ளதோ அச்சக்திக்குரிய சிந்தனையில் அவ்வுயிரினம் செயலாற்றும். எந்த உயி ரினமும் கடும் உடல் உழைப்பு மேற்கொள்ளும் போது அவ் உயிரினத் தின் ஆன்ம அலை வெண்நிறம் கூடுகிறது. இவ்வாறு வெண்ணிறம் கூடக்கூட பகுத்தறிவு கூடுகிறது. பகுத்தறிவு கூடக்கூட பிறப்பு மேல்நிலைக்கு மாற்றமடைகிறது.

பிறவா நிலையை அடைய வேண்டுமெனில் மற்றைய உயிரி னங்களுக்கு இடையூறுகளின்றி சகல விதமான ஆசைகளையும் நீக்க வேண்டியதே முதல் கடனாகும், அத்துடன் பழவினைப் பயனை நீக்குவதற்காக முடிந்தளவு உண்மையான சேவைகளை ஆற்ற வேண்

டும். பிற சீவராசிகளுக்கு தன்னால் இயன்ற சேவைகளை கள்ளம் கபடமின்றி இயன்ற வரை செய்துதான் ஆகவேண்டும். இவ்வாறு செய்துவர ஆன்ம அலையில் ஒளி அணுச் சேர்மானம் ஏராளமாகச் சேரும். ஒளி அணுவினைக் கூட்டுவதற்காக உடற் கஷ்டங்களைப் பாராது நாம் பெற்ற கடன் நீங்க கூடுதலான சேவைகளைச் செய்ய வேண்டும். இவ்வாறு கணக்கிட முடியாதளவு ஒளியணுக்கள் ஆன்ம அலையில் சேரும் போது நீரணுவற்றி உயிர் உருவாக முடியாத பிறப் பில்லாத நிலை ஏற்பட முடியும். நாயன்மார்கள் ஒளியில் முத்திய டைந்தார்கள் என்பது பேரொளியில் அவர்களது ஒளியணு ஒன்றுபட்டு பிறப்பு இல்லாமல் போவதே ஆகும். அந்நிலையே இறைவன் திரு வடி அடையும் நிலை எனக் கூறப்படுகிறது.

எமக்காக இன்னொருவர் செய்யும் சேவையாலோ நாம் பிறி தொருவருக்கு பணத்திற்குச் செய்யும் சேவையாலோ எமது ஆன்ம அலையில் நல்ல பதிவுகள் ஏற்படப் போவதில்லை. அவரவர் தியாக சேவ்வ ஆற்றல் மூலமே அவரவர் ஆன்ம அலையில் அதற்குரிய வினைப் பயன்கள் ஒளி அணுவாகப் பதிவாக முடியும். இதனால் தன் னம்பிக்கையோடு சாவை எதிர் கொள்ளும் மனப்பாங்கு வந்து விடு கிறது. நாம் புரிந்த கன்ம வினைகளில் இருந்து தான் நாம் இறந்த பின் நமது எதிர் காலம் நிர்ணயிக்கப்படுகிறது என்னும் உண்மை எமக்குப் புலனாகி வருகிறது. நன்நெறிகளை கடைப்பிடித்து வாழ வேண்டும் என்ற நல் நோக்கம் மேலோங்குகிறது. பந்த பாசங்கள் எல்லாம் வெறும் கனவுகள் என உணரமுடிகிறது. பிறவிகள் தோறும் நாம் பந்தத் தொடர்பு கொண்டிருந்த உறவுகள் ஒன்றல்ல இரண்டல்ல ஏராளம் என்பது புரிகிறது.

மூவாயிரம் வருடங்களுக்கு முன்னர் கபிலமுனிவர் அண்டத் தைப் பற்றிக் கூறிய உண்மைகளைத்தான் இன்றைய விஞ்ஞானிகள் பல வித ஆராய்ச்சியின் பின்னர் கண்டு பிடித்து வெளியிடுகிறார்கள். சூக்கும உலகத்தை நுண் நோக்காற்றல் உடையவர்களைத் தவிர வேறு எவராலும் பார்க்கவோ உணரவோ முடியாது. சூக்கும உலகம் சட உலகத்தோடு ஊடுருவிக் கொண்டு இணைந்திருக்கின்றது. அது மிக நுட்பமான பரிமாணத்தை உடையது ஆகையால் சூக்குமமாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இவ் இயக்கம் சட உலகின் கண்களுக்கு



தெரிவதில்லை சூக்கும சரீரம் மனிதனின் ஸ்தூல சரீரத்தை சுற்றி இயங்குகிறது. இதில் உயிர்களின் உணர்ச்சிகள், ஆசைகள், எண்ணக் கிளர்ச்சிகள், எல்லாம் அவை அவைக்குரிய நிறங்களில் பிரதிபலிக்கின் றன. எமது கரும வினைக்கேற்ப எமது குணங்கள், உணர்வுகள், மனப் பாங்குகள், மனோசக்திகள் எல்லாம் அமைந்து விடுகின்றன.

நாம் புகவேண்டிய கற்பாயசமும் (கருவறை) எமது கரும வினைக்கேற்பவே நிர்ணயிக்கப்படுகிறது. ஒவ்வொரு ஆன்மாவும் பிறக் கின்ற நாடு, இனம், குடும்பம் எல்லாம் அதனுடைய கன்ம வினைக் கேற்பவே நிர்ணயிக்கப்பெறுகிறது. அண்டங்கள் பல உண்டு என்பதை அன்றைய காலகட்டத்திலே ஞானிகளால் அறியப் பெற்றுள்ளது. சூரன் ஆயிரத்தெட்டு அண்டங்கள் ஆள வரங்கேட்டு நூற்றியெட்டு அண்டங்கள் ஆள வரம் பெற்றான் என் புராணக் கதைகளிலே நாம் படிக்கின்றோம். ஆனால் இப்போது தான் விஞ்ஞான ரீதியாக அவற்றை விளங்கிக் கொள்ள முடிகின்றது.

## பாவ புண்ணியங்கள் எவ்வாறு சேருகின்றன

இன்றைக்கு பல வருடங்களுக்கு முன்னதாக பாவ புண்ணியம் கடவுளால் நடைமுறைப்படுத்தப்படுகிறது எனநம்பி எக்குற்றத்திற் கும் கடவுளை மன்றாடினாற் போதும் என நினைத்து ஏராளமான பொருட்செலவில் ஆலயங்களைக் கட்டுவித்து விழாக்களைச் செய்து வந்தார்கள். கடவுளை பணத்திற்கு வேலை செய்பவராக நம்பி கரு மம் ஆற்றினார்கள். எத்தவறையும் நாம் செய்யலாம். கடவுளை மன்றாடினாற் போதும் பாவம் நீங்கி விடும் என முழுநம்பிக்கை கொண்டிருந்தார்கள். ஆனால் தற்காலம் சந்திர மண்டலத்திற்கு போய் மண்ணெடுத்து வந்து பல கிரகங்களை ஆராயும் முயற்சியில் ஈடுபட்டு பலவித விஞ்ஞானப் பொருட்களை உருவாக்கி அதன்மூலம் பல திட்டங்களை செயற்படுத்துகிறார்கள். இதன் மூலம் சமயங்கள். கூறிய இறை சக்திகளை கிரக சக்திகளாகக் கண்டுள்ளார்கள். இச் சக்தி பூமண்டலம் முழுக்க ஏகமாய்ப் பரவியுள்ளது. தனிய ஆலயத் துள் மட்டும் இச்சக்தி உள்ளது என்பதை நிராகரித்துள்ளார்கள். கிரகங்கள் தங்களைத் தாங்களே சுற்றுவதுடன் இப்பூமண்டலத்தின் சூரியனையும் சுற்றி வருகின்றன; இப்பூமண்டலமும் தீப்பொருளான சூரியனைச் சுற்றி வருகின்றது.

விஞ்ஞான கண்டுபிடிப்பு மூலம் சேர்மான சக்திகளை அறிந்து கொண்டதும் இப்பூமண்டலத்தை இயக்கும் 9 வித இறை (கிரக) சக்திகளை உணர்ந்துள்ளார்கள். உயிரினங்களில் இச்சக்திகளின் சேர்மான மாற்றத்தை அவரவர் வினைப்பயன் மூலமேயன்றி வேறு எவ்விதத்திலும் மாற்ற முடியாது என்பதையும் உணர்ந்து கொண்டார்கள். இதன் பயனாக சில நாடுகளில் மக்கள் எல்லாரும் சமன் எல்லாரும் சமனாக வாழ வழி வகுப்பதே கடமை என உணர்ந்து அவ்வாறே செயற்பட முடிவு செய்து அதை நாட்டுக் கடமையாக்கி செயல் புரிகிறார்கள். இங்கு தியணுச் செறிவு கூடியதால் ஏழை பணக்காரன் என்ற நிலை மாறி அடுத்தவர் கொடுத்தாலும் வாங்காத மனநிலையில் வாழ்கிறார்கள். வெளிநாட்டவர் கடன் கேட்டால் ஏன்? எவ்வளவு தேவை? எனக் கேட்டு இரக்க மனதுடன் உதவுகிறார்கள்.

செய்யுந் தொழிலே தெய்வம். திறமைதான் நமது செல்வம் என்ற மனநிலை எல்லா இடங்களிலும் அடுத்த சில வருடங்களுக்குள் பரவி நடைமுறைக்கு வரலாம். அதன்பின் மக்களில் உயர்வு, தாழ்வு எந்த நாட்டிலும் காண முடியாத நிலை ஏற்படலாம்.

எனவே மக்கள் இதனை உணர்ந்து நம் முன்னோர்களால் நமக்கு அளிக்கப்பட்டுச் சென்ற வரலாற்றுப் பாடங்களை வெறுங் கதைகளாகக் கொள்ளாது அவை உண்மையான சம்பவங்களே என்பதனை உணர்ந்து அதற்கேற்ற வழிமுறைகளைச் செயலாக்கி மீண்டும் பிறவா நிலை அடைய வழிகாட்டியாக இந்நூலை உங்களிடம் சமர்ப்பிக்கின்றோம். பலமுறை வாசியுங்கள் (குறைந்தது 9 முறை) உங்கள் சிந்தனைக்கு சரியெனத் தோன்றுவதை செயற்படுத்துங்கள்.

---

114ம் பக்கம் 1ம் பந்தியின் கடைசித் தொடர்

வியாழன் கிரகத்தை விநாயகன் எனவும், புதன் கிரகத்தை வீரபத்திரர் எனவும், சனி கிரகத்தை வைரவர் எனவும், செவ்வாய் கிரகத்தை முருகன் எனவும் சைவசமய புராணம் கூறுகிறது.



௨

# பகுத்தறிவு மனிதனின் பரிணாம வளர்ச்சி

ஐந்தறிவு விலங்கினமாகிய குரங்கிலிருந்து அதன் வினைப்பயன் காரணமாக ஏற்பட்ட அணுச்சேர்க்கை விகிதாசார மாற்றத்தினால் பகுத்தறிவுள்ள உயிரினமாக வளர்ச்சியடைந்தவனே மனிதன் ஆவான்

இப் பகுத்தறிவுள்ள மனிதன்தான் எவ்வாறு இந்த மனிதப் பிறப்பை அடைந்தான் என்பதையும் தனது இத்தகைய பிறப்பிற்கு காரணம் என்ன என்பதைப் பற்றியும் ஆராய்ந்து அறியும் வல்லமையுடையவனாவான். விஞ்ஞான வளர்ச்சியில் மேலோங்கி ஒரு கோளிலிருந்து ஒரு கோளுக்குச் செல்லும் வளர்ச்சியினைப் பெற்றுள்ளான். இவையெல்லாவற்றுக்கும் அடிப்படைக் காரணம் என்ன என்பதை ஆராயும்போது அவனது கிரகிக்கும் ஆற்றல் (எண்ணம்) காரணமாக பலமுறை மனிதனாய் பிறந்ததால் அணுச்சேர்க்கை விகிதாசாரம் மாறுபாடடைந்து விஞ்ஞான அறிவு வளர்ச்சியடைந்து அச் சிந்தனைக்குரிய அணுக்களின் தொகை அதிகரித்திருப்பதனை நாம் அறியலாம். சிந்தனையானது ஒரு விதமான உடலுழைப்புத்தான்; கஷ்டமான காரியந்தான் கஷ்டப்பட்டுத்தான் அவ் ஆற்றலை வளர்க்க முடியும். ஆற்றலின் வளர்ச்சியினாலேயே புதிய கண்டுபிடிப்புக்களும் வளர்ச்சியும் ஏற்படுகின்றது.

சில சமயம் ஒரே விஷயத்தில் ஆழ்ந்து மூழ்கியிருப்பவன் பிற விஷயங்களையும், புதிய சிந்தனைகளையும் செய்ய முடியாதவனாயிருக்கின்றான். ஆனால் புதிய பாதை கண்டவர்களாலேயே இவ்வுலகம் முன்னேறியிருக்கிறது. புதிய நோக்கு நமக்குத் தேவை அது நம்மை வளர்க்க வளமாக்க உதவும். விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்கள் பலவும் ஒரு துறையிலுள்ள உண்மைகள் மற்றோர் துறையில் இறங்கும்போது ஏற்படுவனதான் அவை புதிய கண்டுபிடிப்புக்களல்ல. சிந்தனை வளர்ச்சியின் வெளிப்பாடுகளேயாகும். சிந்தனை மனிதனால் மட்டுமே செய்யக்கூடிய ஒரு காரியமாகும். ஆனால் சிந்தனையின் ஆற்றலின் வலிமை மனிதருக்கு மனிதர் வேறுபட்டிருப்பதன் காரணம் அம் மனிதர்களது சிந்தனையின் வளர்ச்சிக்குரிய அணுச்சேர்க்கைகளின் தொகை மாற்றங்களேயாகும்.

ஆன்ம அலை இயக்குவது பற்றி சிந்திக்கும் போது பல உண்மைகள் தெரிய வருகின்றது. கார் பற்றறியில் இயந்திர சுழற்சியால் எவ்வாறு மின்சக்தி சேர்மானமாகிறதோ அவ்வாறே மனிதனின் சுத்தமான காற்றணுவில் இயங்கும் உடல் உழைப்பால் மனித ஆன்ம அலையில் ஒளி அணுத்தொகை கூடுகிறது. சுத்தமான காற்றணுவில் இயங்கும் உடல் உழைப்பு இல்லாத வேறு எவ்வகைச் செயலாலும் ஒளி அணு உருவாக முடியாது. ஒளி அணு அதிகம் கூடினாலே அன்றி வேறு எவ்விதத்திலும் பிறப்பை நீக்க முடியாது என்பதை உணர வேண்டும். நல்லெண்ணம் உருவாக சுத்தமான காற்றே முக்கியம்.

ஔவையார் பாடலின்படி கூன், குருடு, செவிடு, பேடு நீங்கிப் பிறப்பதற்கு தீயணு கூடுதலாக சேர்வது கஷ்டமென கூறுகின்றார். மனித இனம் முதலில் உருவானபோது தற்கால அறிவு ஏற்படவில்லை. தற்கால அறிவுக்குரிய அணுத்தொகை முதன் முதலில் ஆன்ம அலையில் சேர்மானமாகவில்லை. மனிதன் திரும்பத் திரும்ப மனிதனாகப் பிறப்பதால் ஒவ்வொரு பிறவியிலும் ஏற்படும் அறிவு சிறிது சிறிதாகக் கூடி தற்காலம் அதிக அறிவு கூடியுள்ளது.

ஒரு மனிதன் பிறந்ததும் பேச்சு வருவதற்குரிய நா வளர்ச்சி படிப்படியாகவே வளர்ந்து பேச்சுச் சரியாக வர இரு வருடங்கள் செல்லலாம். முன்பும் மனிதப் பிறவியிலிருந்து வருபவரானால் இப் பிறப்பில் பேச்சு கெதியில் வந்துவிடும். கல்வித் திறமைசாலியாக உலகில் 13 வயதிலே ஒருவர் உருவாகியுள்ளார். இவர் முன் பல மனிதப் பிறவியில் திறமையடைந்து வந்தவராவர். இவரது ஆன்ம அலையில் அறிவுச் சேமிப்பு கூடுதலாக இருந்ததால் சிந்தனைக்கு இலகுவில் அறிவு கூட வந்தள்ளது, நாம் கற்பது முதலிய சகலதும் ஆன்ம அலையில் போய்ப் பதிவாகி நாம் தேடும் நேரம் திரும்பி எமது சிந்தனைக்கு வருகிறது. நாம் பதிவு செய்யாத எதுவும் திரும்பி வர முடியாது. தமிழ் மட்டும் படித்தவருக்கு சிந்தனையிலிருந்து வேறு பாஷை வர முடியாது. கணித வாய்பாடாக இருந்தாலும் பலமுறை மனனம் செய்து ஆன்ம அலையில் பதித்தாலேயன்றி வேறு வழிகளில் அக் கணக்கு வர முடியாது. இதனுடன் ஒத்த பதிவுகள் முற் பிறவியில் பதிவாகியிருந்தால் இக் கணித வாய்பாடு இலகுவாக வர முடியும்



ஆரம்ப காலங்களிலே மனிதன் வாழ்ந்த நிலையினை இப்போது மனிதன் வாழுகின்ற நிலைமையினூடு தொடர்புபடுத்திப் பார்க்குமிடத்து மனிதனின் வளர்ச்சி எந்தளவிற்கு உயர்வடைந்துள்ளது என்பதனையும் விஞ்ஞான ரீதியிலும், ஆன்மீக ரீதியிலும் மனிதனின் வளர்ச்சிப் போக்கு எத்தன்மையினையுடையதாக இருக்கின்றது என்பதையும் நாம் அறியலாம். அன்று காடுகளிலே மரங்களிலும் கற்பாறைகளினாலான குகைகளிலும் இலைகுழைகளை உடையாகவும் தரித்து வாழ்ந்த மனிதன் இன்று விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக விதவிதமான உடைகளை அணியப் பழகிக் கொண்டுள்ளதுடன் மாட மாளிகைகளிலும் வாழ்ந்து வருகின்றான் மனிதனின் வளர்ச்சிக்கும் வீழ்ச்சிக்கும் அவனது சிந்தனைதான் காரணமாகின்றது. சிந்தனை ஒரு சக்தி. ஒருமுகப்படுத்தப்படும் சிந்தனை சதா சிந்திக்கப்படும் ஆசை வலு படைத்த சக்தியாய் மாறுகின்றது. ஒரு மனிதன் எந்தச் சிந்தனையினால் ஆக்கிரமிக்கப்படுகின்றானோ அச் சிந்தனையின் சக்தி அவனைச் சுற்றிப் பரவி நிற்கின்றது. அந்த சிந்தனையின் சக்தியை அவன் செல்லுமிடங்களிலெல்லாம் பரப்புகிறான்; அத்தகைய சூழ்நிலையில் ஒத்த சிந்தனையின் சக்தியானது வெளியில் உலவும் பிற சிந்தனைச் சக்திகளைக் கவருகின்றன.

ஐந்தறிவு படைத்த விலங்கினங்கள் தம்மினத்தைத் தாமே அழித்துக்கொள்ளும் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளனவா? விஞ்ஞான வளர்ச்சியில் முன்நோக்கிய மனிதன் ஆன்மீக ரீதியில் பின்தள்ளப்பட்டுள்ளான். நாம் பிறப்பது முதல் இறப்பது வரையான சகல செயற்பாடுகளையும் வளர்ச்சியினையும் அக்குவேறு ஆணிவேறாக ஆராய வல்லவனாக வளர்ச்சியடைந்துள்ள மனிதன் இறந்தபின் ஆன்மா எங்கு செல்கின்றது என்பதை அறியும் ஆற்றலை வளர்க்க விரும்பாமலிருக்கின்றான். ஏன்? மீண்டும் பிறக்க விரும்பும், வாழ விரும்பும் ஆசையினால் தான் அவ்வாறு செய்கிறானா? அல்லது பிறப்பறுக்கின்ற எண்ணம் ஏற்படாது தொடர்ந்தும் இப்பூமியில் பிறந்து வாழ விரும்புவதால் தான் அவனது ஆற்றல் வளர்ச்சியடைகின்றதா? இவ்வாறான கேள்விகளைக் கொண்டதான சிந்தனைகளையுடையவனும் மனிதன்தான். ஆனால் அவ்வாறான மனிதனால் ஏன் உண்மையை உணர முடிய

வில்லை. பரிணாம வளர்ச்சிப் போக்கில் மாற்றங்களைக் கண்டுவந்த மனிதன் உண்மையை உணர்ந்தானாகில் இவ்வுலகில் எந்தவிதமான பிரச்சனைகளும் இருக்க முடியாது. பிரச்சனைகளுக்குக் காரணம் மனிதன்தான். அதேவேளை செயற்பாட்டின் மூலம் பிரச்சனைகளை வெல்ல முடியாதவனாக இருப்பவனும் மனிதன்தான். மனிதன் ஏன் பல்வேறு விதமான பிரச்சனைகளுக்கு ஆளாகின்றான் என்பதை நாம் ஆராய்ந்து பார்க்கும்போது ஆசை காரணமாகவே பெரும்பாலான பிரச்சனைகள் ஏற்படுவதை உணரலாம்.

இந்தப் பிரச்சனைகளை முற்றாக நீக்கிக் கொண்டு வாழ மனிதனால் முடிவதில்லை. ஆசை, இதன் மூலம் எத்தனையோ பிரச்சனைகள் என்பதைத் தெரிந்து கொண்ட மனிதன் ஆசையை எந்த வழியிலும் முற்றாக நீக்கிக்கொள்ள முடிவதில்லை, இந்த ஆசை எம்மைவிட்டு எப்போது நீங்கப்போகிறது என்பதைக் கண்டறிய மனிதன் முயல்வதாகத் தெரியவில்லை. கோளிலிருந்து கோளுக்குச் செல்வதற்கு விரும்புகின்ற மனிதன் விஞ்ஞான ரீதியிலே அத்தகைய அணுச் சேர்க்கை வளர்ச்சியினை அடைந்து மேலோங்கி நிற்கின்றான். விலங்கினங்கள் பெரும்பாலானவை தமது இனத்தின்சகல இயல்புகளையும் ஒருங்கே ஒத்தனவாகவே காணப்படுகின்றன. ஆடு, மாடு, நாய் போன்றவை தமது இயல்புகளில் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பட்டனவாக பெரும்பாலும் காணப்படுவதில்லை. ஆனால் மனிதனானவன் தனக்குள் வேற்றுமை வளர்வதற்கான வகையிலே பல்வேறு விதமான மொழிகள், உணவுப்பழக்கங்கள், கலாச்சாரங்கள் என வேறுபட்டு சொல்லொணாத் துன்பங்களுக்குள் சிக்கியுள்ளான், இவற்றிலிருந்து அவன் எவ்வாறு விடுதலை பெறுவான் என்பதனை ஆராய வேண்டியதும் மனிதனைச் சார்ந்த செயலேயாகும்.

நேரம் பொன்னானது என்று கூறுவார்கள். நேரத்தை மீதப்படுத்துவதற்காகவும், செயற்பாடுகளை துரிதப்படுத்துவதற்காகவும் மனிதன் புதிய தொழில்நுட்பங்களை அறிமுகப்படுத்தினான். அவற்றின் மூலம் மீதப்படுத்தப்பட்ட நேரத்தை பெரும்பாலும் தீய சிந்தனையிலே செலவிட்டான். பொன்னான நேரத்தை இந்தவகையிலே மண்ணாக்கினான். ஆரம்பகாலத்திலே மனிதனுக்கு நேரம் மீதமாக இருக்கவில்லை. அவன் முழுநாளும் நேரத்தை உடலுழைப்பிலேயே செலவிட்டான். இதன்காரணமாக அவனுக்கு தீய சிந்தனையிலே செலவிடக்கூடியதாக நேரம் இருக்கவில்லை.



அதேபோன்று அக்காலங்களிலே உலகிலே இன்று காணப்படுகின்ற குழப்பங்கள் பிரச்சனைகள் இருக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

மனிதனின் சிந்திக்கும் ஆற்றல் வளர வளர சகல துறைகளிலும் வளர்ச்சிகண்டு வருகின்ற மனிதன் பிரச்சனைகள், குழப்பங்கள் கருத்து முரண்பாடுகள், மோதல்கள் போன்ற எல்லாவற்றிலும் வளர்ச்சிகண்டு வருகின்றான் என்பது யாவரும் அறிந்ததே. ஆனாலும் மனிதனுக்கு மட்டுமே உரியதான பகுத்தறிவின் மூலம் நல்லவை தீயவைகளை மனிதனால் பகுத்து ஆராய்ந்து அறியமுடிகின்றது. ஆனால் அவற்றை செம்மையான வழியில் நெறிப்படுத்த உள்ளம் பண்பட்டிருக்க வேண்டும். ஆயினும் ஆசை காரணமாக உள்ளத்தை பண்படுத்தமுடியாத நிலைமை காணப்படுகின்றது. அதேவேளை ஆசையை ஒழிக்க எத்தனைபேரால் மூடியும். ஒரு தனி மனிதனால் ஆகக்கூடிய காரியமல்ல ஒவ்வொரு தனிமனிதனாலும் ஆகவேண்டிய காரியமே இதுவாகும். ஒவ்வொரு மனிதனும் தன்னல சிந்தனையிலிருந்து பொதுநல சிந்தனையாளனாக மாற வேண்டும். சிந்தனை மாற்றத்தினை நாம் ஏற்படுத்திக் கொள்ளும் வழிமுறைகளுக்குள் சுவாத்தியம், உணவுப் பழக்கங்கள் என்பனவும் உள்ளடங்குகின்றன. நல்ல காற்று, நல்ல உணவு (மாமிசமல்லாத தாவர உணவு வகைகள்) நல்ல ஒளி என்பன எமது சிந்தனையில் நல்ல மாற்றத்தை ஏற்படுத்தும் காரணிகளாகும்.

இந்த வழிமுறைகளை பின்பற்றுமிடத்து விரைவில் மனிதன் தூய சிந்தனையாளனாக உருவாகலாம். சுத்தமான காற்றணுக்கள் காணப்படும் சூழலில் வாழுகின்ற மனிதனின் சிந்தனை தூயதாக இருப்பதற்கான சாத்தியங்கள் பெரும்பாலும் கூடுதலாகவே காணப்படுகின்றது. சுத்தமான காற்றணு இருக்கக்கூடியதான நிலையினை ஏற்படுத்துவதில் தாவர வர்க்கங்களே முன்னணியில் திகழ்கின்றன. எனவே இவ்வாறாக மனிதனின் பரிணாம வளர்ச்சியில் இயற்கையளித்துள்ள செல்வங்கள் அனைத்தும் ஏதோ ஒரு வகையில் ஒன்றுடனொன்று தொடர்புபட்டதாகக் காணப்படுவதையும் அதேவேளை

மனிதனின் சிந்தனை வளர்ச்சிப் போக்கினைத் தீர்மானிப்பதில் ஐந்து வித அணுத்தொகைகளின் விகிதாசார மாற்றம் பெரும்பங்கு கொண்டுள்ளது என்பதையும் நாம் தெளிவாக உணர்ந்து கொள்ள முடிகின்றது.

ஆகவே நம் மனம் என்னும் சோலையில் நல் எண்ண விதைகளை விதைப்போம். நம் வாழ்வையும் நாட்டு வாழ்வையும் எப்படி நல்லவிதமாக மாற்றுவது என்ற சாதனை எண்ணங்களை வளர்ப்போம்.

## முற்பிறவியை அறிய முடியலாம்

எல்லா மனிதரும் சூக்கும தேக ஆன்ம அலை செயல் பெறும் வரை பிறந்தேயாக வேண்டும். ஆன்ம அலையில் 5 வித சக்திகளில் ஒருவித சக்தி இல்லாது விட்டால் ஆன்ம அலை செயல் பெற முடியாது பிறப்பு நீங்கி விடுகிறது. அவ்வாறு அமையாது விட்டால் இறக்கும் எல்லா மனிதரும் மறுபடியும் பிறந்தேயாக வேண்டும். இதில் சில பல வேறுபாடுகள் ஏற்படவே செய்யும், சிலவேளை கடும் குற்றவாளியாக இருந்தால் மிருகப் பிறப்பும் பிறக்க வேண்டி வரலாம் அல்லது ஆண், பெண் வேறுபாடு வரலாம். முன்னைய பிறவியை அறிய முடியாதென பலரும் நினைப்பார்கள். கண்டுபிடிக்க வேண்டுமென முயற்சி செய்தால் காலம் சென்றாவது இன்னொருவர் கண்டு கொள்ள முடியும். திடீரென இறப்பவர்கள் மனித மறு பிறவியில் சிந்தனை வளர்ந்ததும் அவரவர் முற்பிறவியைப்பற்றி கூறமுடிகிறது. ஊர்சுற்றி சோம்பலாய் வயிறு வளர்ப்பவர்களது ஆன்ம அலையில் பகுத்தறிவு சேர்மானம் இல்லாது போவதால் திரும்ப மேல் நிலைப் பிறவியாய் வரமுடியாது. இறப்பவர் எவர் மீது கடும் அன்பு கொண்டுள்ளாரோ அல்லது கடும் கோபம் கொண்டுள்ளாரோ அவ்இடம் பிறக்க முயற்சிப்பார். அதற்கு வசதி இல்லாது போனால் சுற்றத்தாரிடம் ஒரு வருட காலத்துள் பிறந்திடுவார். இப் பிறப்பில் குற்றம் செய்யாதவர் எதிர்பாராத முற்பிறவித் தண்டனை அடையுஞ் சமயம் இதை இலகுவில் கண்டுபிடிக்க முடியும். இவ்வாறு ஒரு ஆண் இருபத்துநாலு வயதில் இறந்து ஒரு வருடத்தில் பெண்ணாய் பிறந்து முற்பிறவி வினைப்பயன் அடைந்ததை அவவின் சுற்றத்தார் இன்று ஏற்கின்றனர். இதைப்பற்றி ஆராய்ந்தபோது உண்மைகள் பல வெளிவந்தன. தீவினைப் பதிவுகள் அவரவர் ஆன்ம அலையில் உடனுக்குடன் கரு நிறப்புள்ளியாய் பதிவாகி விடுகிறது. மறு பிறப்பில் அப்பதிவுப்புள்ளி செயலுக்குவரும்போது அதற்குரிய எதிர்பாராத தண்டனை கிடைக்கிறது. வினைப்பயனை மாற்ற எவராலும் முடியாது.

செய்யுந் தொழிலே தெய்வம். திறமைதான் நமது செல்வம் என்ற மனநிலை எல்லா இடங்களிலும் அடுத்த சில வருடங்களுக்குள் பரவி நடைமுறைக்கு வரலாம். அதன்பின் மக்களில் உயர்வு, தாழ்வு எந்த நாட்டிலும் காண முடியாத நிலை ஏற்படலாம்.

எனவே மக்கள் இதனை உணர்ந்து நம் முன்னோர்களால் நமக்கு அளிக்கப்பட்டுச் சென்ற வரலாற்றுப் பாடங்களை வெறுங் கதைகளாகக் கொள்ளாது அவை உண்மையான சம்பவங்களே என்பதனை உணர்ந்து அதற்கேற்ற வழிமுறைகளைச் செயலாக்கி மீண்டும் பிறவா நிலை அடைய வழிகாட்டியாக இந்நூலை உங்களிடம் சமர்ப்பிக்கின்றோம். பலமுறை வாசியுங்கள் (குறைந்தது 9 முறை) உங்கள் சிந்தனைக்கு சரியெனத் தோன்றுவதை செயற்படுத்துங்கள்.

3-10-95 விநாயகர் தரும நிதியம்

---

உ

## பதஞ்சலி முனிவரின் பரிணாம தத்துவம்

சுதந்திரமான இயக்கத்திற்கு எவ்வித தடையோ எதிர்ப்போ இருக்கக் கூடாது. ஆனால் பரிணாமக் கிரமத்தில் படியேறிவந்த மனித மூளை மண்டலத்தில் இயற்கைக்கு மாறாக செயற்கையான ஈர்ப்பும் உரோஞ்சுதலும் உருவாகியுள்ளன. இந்த ஈர்ப்புக்கும் உரோஞ்சுதலுக்கும் அடிப்படைக் காரணம் காமம், வெகுளி, மயக்கம், அச்சம், துக்கம், சந்தோசம், பொறாமை, வெறுப்பு ஆகிய மனோவிகாரங்களாகும். இவைகளை எல்லாம் நீக்கி பரிணாமப் பாதையில் தொடர்ந்து செல்பவன் யோகியாகிறான். நிறை ஞானம் அவனுக்கு சொந்தமாகிறது. அணு நிலையில் தோன்றிய பரிணாமம் இந்த ஆன்ம ஞான நிலையில் முற்றுப் பெறுகிறது.

ஆக்கம்: கு. பதிதரன்
இணுவில் மேற்கு.

விநாயகர் தரும நிதிய நிறுவனத்தால் இதுவரை வெளியிடப்பெற்ற இலவச வெளியீடுகளின் விபரங்கள் ஒரே பார்வையில்:—

| வெளியீட்டின் பெயர்கள் | வெளியிடப் பெற்ற காலம் | பக்கங்கள் | பிரதிகள் | வெளியீட்டு இலக்கம் |
|---|---|---|---|---|
| ★ 1. மருத்துவ வெளியீடு | 1988, 90, 91, 92 | 48 | 16500 | 1, 2, 7, 11, 16, 18, 26. 28, 31 |
| ★ 2. கீதை அமுதரசம் | 1989 | 24 | 700 | 3 |
| 3. ஆத்ம சிந்தனை | 1990, 91, 92, 94 | 46 | 6234 | 4, 5, 12, 19, 24, 34 |
| ★ 4. ஞான வாழ்வு மலர | 1990, 91 | 48 | 2800 | 6, 17 |
| 5. நீதிப்பொருள் | 1990, 94 | 38 | 2534 | 8, 33 |
| 6. அறநெறிச் சிந்தனை | 1990, - 94 | 30 | 15950 | 9, 13, 14, 15, 32, 37, 32A |
| ★ 7. பிரபஞ்ச தத்துவம் | 1990, 91, 94 | 30 | 3234 | 10, 21, 33A |
| ★ 8. தெய்வீகப் பண்பு நிலை | 1991 | 26 | 1600 | 20 |
| ★ 9. ஆன்மா உருவாகும்விதம் | 1991 | 38 | 3630 | 22, 22A, 40A |
| ★ 10. சாரணர் நூல் | 1992 | 48 | 1550 | 23, 25 |
| 11. தமிழ் அகராதி | 1992 | 280 | 1200 | 27 |
| 12. மருத்துவ தொகுப்புகள் | 1992, 93, 94 | 120 | 4739 | 28, 29, 31, 36 |
| 13. திருக்குறள் | 1993 | 54 | 6539 | 30, 39 |
| 14. உறுப்பெழுத்துக் கொப்பி | 1993, 1994 | 16 | 14757 | 35, 38 |
| 15. அறிவியல் சிந். அலைகள் | 1994, 1995 | 60 | 3947 | 40 41 |
| 16. விஷகடி மருத்துவம் | 1995 | 40 | 1600 | 42 |
| 1. அறத் தமிழ் ஞான சஞ்சிகை | 1992, 1993, 94, 95 | 40 சராசரி | 1600 | மாதாந்த, காலாண்டு வெளியீடு |
| 2. அறம் வளர் இளம் தமிழ் | 1992, 1993, 94, 95 | 40 சராசரி | 2100 | காலாண்டு வெளியீடு |

★ இவ்வெளியீடுகள் கைவசம் இல்லை.

